உ ACC-NO-2899

கடவுள் துணை.

# வராகிமாலை.

இந்து - அஷ்டாவதானம்

பூவை

கலியாணசுந்தரமுதலியாரால

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1892வரு.

உ

கடவுள் துணை.



# வ ரா கி மா லை.

கட்டளைக்கலித்துறை.

வ சி ய ம்.

இருகுழை கோமளந் தாள்புட்ப
ராக மிரண்டுகண்ணும்
குருமணி நீலங்கை கோமே
தகநகங் கூர்வயிரம்
திருநகை முத்துக் கனிவாய்
பவளஞ் சிறந்தவல்லி
மரகத நாமந் திருமேனி
யும்பச்சை மாணிக்கமே. (க)

தரிசனம்.

தோராத வட்டமுக் கோணசட்
கோணத் துலங்கு வட்டத்
தீரா றிதழிட்டு ரீங்கார
முள்ளிட் டிதுநடுவே

ஆரா தனைசெய் தருச்சித்துப்
பூசித் தடிபணிந் தால்
வாரா திராளல்ல ளேவாலை
ஞான வராகியுமே. (உ)

தம்பனம்.

மெய்ச்சிரத் திற்பணி யார்மனங்
காய மிகவெகுண்டு
கைச்சிரத் தேந்திப் புலானிண
நாறக் கடித்துதறி
வச்சிர்த் தந்த முகப்பணி
யாற்குத்தி வாய்கடித்துப்
பச்சிரத் தங்குடிப் பாளே
வாரகி பகைஞரையே. (ங)

மோகனம்.

டிக்கும் பெரும்புகழ்ப் பஞ்சமி
யன்பர் பகைஞர்தமை

அடிக்கு மிருப்புத் தடிகொண்டு
பேய்க ளவர்குருதி
குடிக்குங் குடர்கொண்டு தோண்மா
லை யிட்டுக் குலாவிமன்றில்
நடிக்கும் வாராகி பதினு
லுலகு நடுங்கிடவே. (௪)

ஆக்ருடனம்.

நடுங்கா வகையன்பர் நெஞ்சினிற்
புக்கவர் நண்ணலரைக்
கொடுங்காளி யுண்ணக் கொடுக்குங்
குருதிகள் கொப்பளித்திட்
டிடும்பாரக் கொங்கையின் மீதே
யிரத்தத் திலகமிடும்
தொடுங்கார்ம நோன்மணி வாராகி
நீலி தொழி லிதுவே. (ரு)

## உச்சாடனம்.

வேய்க்குல மன்னதிண் டோளாள்
வாராகிதன் மெய்யன்பரை
நோய்க்குல மென்ன விடும்புசெய்
வார்தலே நொய்தழித்துப்
பேய்க்குல முண்ணப் பலிகொண்டு
போட்டுப் பிணக்குடரை
நாய்க்குலங் கௌவக் கொடுப்பாள்
வாராகியென் ஞாரணியே. (சு)

## பேதமாரணம்.

நாசப் படுவர் நடுங்கப்
படுவர் நமன் கயிற்றால்
வீசப் படுவர் வினையும்
படுவரிம் மேதினியோர்
ஏசப்படுவ ரிழுக்கப்
படுவரென் னேழை நெஞ்சே

வாசப் புதுமலர்த் தோளாள்
வாராகியை வாழ்த்திலரே. (௭)

வசியம்.

வாலை புவனை திரிபுரை
மூன்றுமிவ் வைய கத்திற்
காலையு மாலையு முச்சியு
மாகவெக் காலத்துமே
ஆலய மெய்தி வராகிதன்
பாதத்தை யன்பிலுன்னி
மாலயன் றேவர் முதலான
பேர்களும் வாழ்த்து வரே. (அ)

வித்துவேடணம்.

வருத்திப் பகைத்திசென் றோடறி
யாமன்முன் வானவர்க்காச்
சிரித்துப் புரமெரித் தோன்வாம
பாகத்துத் தேவி யெங்கள்

கருத்திற் பயிலும் வராகியெம்
பஞ்சமி கண்சிவந்தாற்
பருத்திப் பொதிக்கிட்ட தீப்பொறி
காணும் பகைத்த வர்க்கே. (கூ)

மாரணம்.

பாப்பட்ட செந்தமிழ்ப் பாவாணர்
நின்மலர்ப் பாதந் தன்னிற்
பூப்பட் டதுவும் பொறிபட்ட
தோநின்னை யேபுகழ்ந்து
கூப்பிட்ட துன்செவி கேட்கிலை
யோவண்ட கோளமட்டும்
தீப்பட்ட தோபட்ட தோநின்னை
யாளர் செருவெங்குமே. (கய)

சிலைமாரணம்.

எங்கு மெரியக் கிரிகள்
பொடிபட வேம்பகைஞர்

அங்கம் பிளந்திட விண்மண்
கிழிந்திட வார்த் தெழுந்து
பொங்குங் கடல்கள் சுவறிடச்
சூலத்தைப் போகவிட்டுச்
சிங்கத்தின் மீது வருவாள்
வராகி சிவ சத்தியே. (கக)

சத்துருமாரணம்.

சத்தி கவுரி மகமாயி
யாயியென் சத்துருவைக்
குத்தி யிரணக் குடரைப்
பிடுங்கிக் குலாவிநின்றே
இத்திசை யெங்கு நடுங்கக்
கிரிக ளிடிபடவே
நித்த நடித்து வருவாள்
வராகியென் னெஞ்சகத்தே. (கஉ)

பூதமாரணம்.

நெஞ்சகந் தன்னி னிறைந்திருக்
கின்றவ னிர்க்குணத்தி
நஞ்சணி கண்டத்தி நாரா
யணிதனை நம்புமெற்கு
வஞ்சனை பண்ணி மதியாத
பேரைவா ளாலேயுண்ணக்
கொஞ்சி நடந்து வருவாள்
வாராகி குலதெய்வமே. (௧௩)

எதிரிமாரணம்.

மதுமா மிசந்தனைத் தின்பா
ளிவளென்று மாமறையோர்
அதுவே யுதாசினஞ்செய்திடுவா
ரந்த வற்பர்கடங்
கதிர்வா யடைத்திட வுள்ளங்
கலங்கக் கடிதடித்து

விதிர்வா ளில்வெட்டி யெறிவாள்
வராகியென் மெய்த்தெய்வமே. (கச)

தேவிஆக்ருஷணம்.

ஐயுங் கிலியு மெனத்தொண்டர்
போற்ற வரியபச்சை
மெய்யுங் கருணை வழிந்தோடு
கின்ற விழியுமலர்க்
கையும் பிரம்புங் கபாலமுஞ்
சூலமுங் கண்ணெதிரே
வையந் துதிக்க வருவாள்
வராகி மலர்க்கொடியே. (கரு)

சத்துருமாரணம்.

மாளு மனமுந் தலையுங்
குலையத் தரியலர்கள்
மாளும் படிக்கு வரந்தரு
வாயுன்னை வாழ்த்துமன்பர்

கோளும் பகையுங் குறியார்கள்
வெற்றி குறித்தசங்கும்
வாளுங் கடகமுஞ் சூலமு
மேந்தி வருந்துணையே. (கசு)

லோகமாரணம்.

வருந்துணை யென்று வராகியென்
றன்னையை வாழ்த்திநிதம்
பொருந்துந் தகைமையைப் பூணு
தவர்தம் புலாலுடலைப்
பருந்துங் கழுகும் வெம்பூதமும்
வெய்ய பசாசுகளும்
விருந்துண்ணப் பட்டுக் கிடப்பர்கண்
டாயுடல் வேறுபட்டே. (கஎ)

ஏவல்சத்துருமாரணம்.

வேறுக்கு நெஞ்சும் வினையும்வெவ்
வேறு வெகுண்டுடலம்

கூறுக்கு நெஞ்சத்திற் செந்நிற
மான குருதிபொங்கச்
சேறுக்குங் குங்குமக் கொங்கையிற்
பூசுந திலகமிடு
மாறுக்கு நேமிப் படையா
டனைவணங் காதவர்க்கே. (கஅ)

மிருகமாரணம்.

பாடகச் சீரடிப் பஞ்சமி
யன்பர் பகைஞரதமை
ஓடவிட் டேகை யுலக்கைகொண்
டேற்றி யுதிரமெல்லாம்
கோடகத் திட்டு வடித்தெடுத்
தூற்றிக் குடிக்குமெங்கள்
ஆடகக் கும்பவிளைக்கொங்கை
யாளெங்க ளம்பிகையே. (கக)

## பாவமாரணம்.

தாமக் குழலுங் குழையும்பொன்
 னோலையுந் தாமரைப்பூஞ்
சேமக் கழலுந் துதிக்கவந்
 தேற்குச் செகமதனில்
வாமக் கரள களத்தம்மை
 யாதி வராகிவந்து
தீமைப் பவத்தைக் கெடுத்தாண்டு
 கொள்வள் சிவசத்தியே. (உ0)

## சத்துருமாரணம்.

ஆரா கிலுநமக் கேவினை
 செய்யி னவருடலம்
கூராகும் வாளுக் கிரையிடு
 வாள்கொன்றை வேணியான்
சீரார் மகுடத் தடியிணை
 சேர்க்குந் திரிபுரையாள்

வாராகி வந்து குடியிருந்
தாளென்னை வாழ்விக்கவே (உக)

பிசாசுமாரணம்.

தரிப்பாள் கலப்பையென் னம்மை
வராகியென் சத்துருவைப்
பொரிப்பாள் பொறியெழச் செந்தீயி
லிட்டுப் பொரித்ததலை
நெரிப்பா டலைமண்டை மூளையைத்
தின்றுபின் னெட்டுடலை
உரிப்பாள் படுக்க விரிப்பாள்
சுக்காகவுலர்த்துவளே. (உஉ)

எதிரிமாரணம்.

ஊரா கிலுமுட னாடா
கிலுமவர்க் குற்றவரே
டாரா கிலுமெக் காற்றுவ
ரோவட லாழியுண்டு

காரார் கனத்த வுலக்கையு
முண்டு கலப்பையு
வராகி யென்னுஞ் சண்டப்
ரசண்ட வடிவியுண்டே. (உரு)

சேனைமரணம்.

உலக்கை கலப்பை யொளிவிடு
வாள்கட காழிசங்கம்
வலக்கை யிடக்கையில் வைத்த
வராகியென் மாற்றலர்கள்
இலக்கமில் லாத வெழில்பெருஞ்
சேனை யெதிர்வரினும்
விலக்கவல் லாளொரு மெல்லிதன்
பாதம் விரும்புகவே. (உசு)

சத்துருமாரணம்.

தஞ்சமுன் பாதஞ்சரணா
கதியென்று சார்ந்தவர்மேல்

வஞ்சனை பில்லி கொடிதேவல்
சூனியம் வைத்தவரை
நெஞ்சம் பிளந்து நிணக்குடல்
வாங்கி நெருப்பினிலிட்
டஞ்சக் கரங்கொண் டறுப்பாள்
திரிபுரை யானந்தியே. (உ௫)

அலைபட்டு நெஞ்ச மலைந்துயிர்
சோர வலக்கை யால்
கொலைபட் டுடலங் கழுகுகள்
சூழக் கருகு பொங்கித்
தலைகெட் டவயவம் வேறாய்ப்
பதைப்புற்றுச் சாவர்கண்டீர்
நிலைபெற்ற நேமிப் படையா
ளைநினை யாதவரே. (உ௬)

பகைவர்மாரணம்.

சிந்தை தெளிந்துனை வாழ்த்திப்
பணிந்து தினந் துதித்தே

அந்திபக லுன்னையர்ச்சித்த
பேரை யசங்கிதமா
நிந்தனை பண்ணி மதியாத
லுத்தர் நிணமருந்திப்
புந்தி மகிழ்ந்து வருவாய்
வராகிநற் பொற்கொடியே. (உஎ)

படைமாரணம்.

பொருப்புக்கு மாறுசெய் யாழியுந்
தோடும் பொருப்பை வென்ற
மருப்புக்கு நேர்சொலுங் கொங்கையு
மேனியும் வாழ்த்துமென
திருக் கடிய மனத்திற்
குடிகொண் டெதிர்த்தவர்க்கு
நெருப்புக் குவாலெனக் கொல்வாய்
வராகியென் னிர்க்குணியே. (உஅ)

மோகனமாரணம்.

தேறிட்ட நின்மலர்ப் பாதார
விந்தத்தைச் சிந்தைசெய்து
நீறிட்ட வர்க்கு வினைவரு
மோநின் னடியவர்பால்
மாறிட் டவர்தமை வாளா
யுதங்கொண்டு வாட்டியிரு
கூறிட் டெறிய வருவாய்
வாராகி குலதெய்வமே. (உகூ)

உச்சாடனம்.

நரிபரி யாக்கிய சம்புவின்
பாகத்தை நண்ணியமான்
அரியயன் போற்று மபிராமி
தன்னடி யார்க்குமுன்னே
சரியாக நின்று தருக்கஞ்செய்
மூட்டர் தலையை வெட்டி
யெரியா யெரித்து விடுவாள்
வாராகி யெனுந் தெய்வமே. (ங0)

வீற்றிருப் பாணவ கோணத்தி
 லேல்நம்மை வேண்டுமென்று
காத்திருப் பாள்கலி வந்தணு
 காமலென் கண்கலக்கம்
பார்த்திருப் பாளல்ல வெங்கே
 யென்றங்குச பாசங்கையில்
கோத்திருப் பாளிவ ளேயென்னை
 யாளுங் குலதெய்வமே. (௩௧)

சிவஞா னதிபாதகி செங்கைக்
 கபாலி திகம்பரி நற்
றவமாரு மெய்யன்பர்க் கேயிடர்
 சூழுந் தரியலரை
அவமானஞ் செய்யக் கணங்களை
 யேவு மகோரியிங்கு
நவமாக வெங்தெனைக் காக்குந்
 திரிபுர நாயகியே. (௩௨)

வாராகிமாலை-முற்றிற்று.



சிவமயம்.

---

# சதுர்கோணமாலை.

---

உற்றதலம் பெருந்துறைநா டென்
னுந்தேச - முட்புகுந்து சங்கநதி தீர்த்
தமாடிக், கொற்றமொடு நித்தவளநா
டுபோய் - வைகுந்தமுற்று நெடியோ
னை யடிவணங்கக், கற்றனையே காலமா
லை யுச்சிமூன்று - காலமுநீபூசித்துக்கவ
லைதீரப், பெற்றனையே நெஞ்சகமே யிந்
தப்பேறு - பெற்றவற்குப் பிறவியுமு
ண் டென்னலாமோ. (க)

ஊறல்வந்துபாயு மடைதன்னின்மூழ்
கி - யுச்சிமலை மீதேறி மடையிற்பூத்த,
நாறுமலர் தனையெட்டிப் பறித்துக்கொ

ண்டு - நடுவீடு சென்றுமணி மண்டபத்தில், ஏறிமயிர்ப் பாலத்தினின்றும்கொண்டெம் - மீசன்மே லம்மலரைச் சாத்தநீயும், பேறுபெற்ருய் நெஞ்சகமே யிந்தப்பேறு - பெற்றவற்குப் பிறவியுமுண் டென்னலாமோ. (உ)

நீடுகதிர் சந்திரனு மாடும் பொய்கை நீர் தன்னின்மூழ்கிமலர் கொய்தப்பாலே ஆடுமலர்ப் பாதமுடை யழகன்கோயிலணுகியான் திருமுடியிலந்தப்பூவைச்,சூடிவல மிடமாக வீழ்ந்தெழுந்து - தொழுதுகாங் குவித்திறைஞ்சித் துயாந்தீரப் பீடுபெற்ருய் நெஞ்சகமே யிந்தப் பேறு - பெற்றவற்குப் பிறவியுமுண் டென்னலாமோ. (ங)

ஒவ்விருந்த குளத்தில்வீழ்ந் தலையை நீக்கி - யோங்கார கம்பவழி பற்றிபா யேறிச், சவ்விருந்த மனைபுகுந்துசிவந்த தத் - தாமரையைத் தரிசித்துத் தற் சொரூபம், அவ்விருந்த விடந்தேடிப் பு குந்துசோதி, யத்தனா னருள்பெற்று னந்தக்கண்ணீர், பெய்வுபெற்ருய் நெஞ் சகமேயிந்தப்பேறு - பெற்றவற்குப்பி றவியுமுண் டென்னலாமோ. (ச)

நவ்வுமவ்வு மிருந்தவிரு பதியினுள் ளே - நடுவிருந்து ஞாலமதை யாண்டிரு ந்த, சிவ்வும் வவ்வு மிரண்டனையுந் தரி சித்தப்பாற் - செங்கமல மலர்ப்பாத வி ருப்பிடஞ்சென், றவ்வுமுவ்வுமிருந்தவி ட மேவியல்ல - லற்றிடமுற்றருள்பெ ற்று னந்தபாஷ்பம்,பெய்வுபெற்ருய்நெ

ஞ்சகமே யிந்தப்பேறு - பெற்றவர்க்கு
ப் பிறவியுமுண் டென்னலாமோ. (ரு)

நாற்சதுர கூடத்துவாசற் சென்று-ந
ல்லநீர்க் கடலிலனுட் டானஞ்செய்துதீ
ச்சுடர தாகுநெருப் பாறுதாண்டிச் - சி
றப்பான தானபர வெளியுட் சென்று,
மாட்சிபெறு மம்மையுளங் களிக்கநோ
க்கி - மகிழ்ந்தாடுஞ் சிவனிருத்தம் பார்
த்துநல்ல, பேட்சையுற்றாய்நெஞ்சகமே
யிந்தபேறு - பெற்றவற்குப் பிறவியுமு
ண் டென்னலாமோ. (சா)

பயமிருந்த மனைகடந்து முப்பாழ் தா
ண்டிப் - பத்மநதி தீர்த்தத்திற்பூசைதா
ன்செய் தயனையளித் தவன்வீட்டுக்கப்
பாலேகி - பறுத்தடைத்த வாசல்கடந்த

ருளினாலே,சுயம்பதியாயெழுந்துபடை த் தளித்தமூர்த்தி - சோதிபராபரத்தை யடி வணங்கிநல்ல, பெயர்பெற்றாய் நெ ஞ்சகமே யிந்தப்பேறு - பெற்றவற்கு ப் பிறவியுமுண் டென்னலாமோ. (எ)

மூலையிருந்த விடத்தையறிந் தமூர்த்த முண்டு, மூன்றுகண்ணின்பிரகாசத்தொ ளியிற் சென்று, தலையிருந்த விடமறி பா லுந்திமூழ்கித் - தற்பரத்தின் வீட ணுகித் தற்சொரூபக்,கலைவாவுடோக்கு நினை வாலேகண்டு - சுங்குல்பகலற்றவி டத் திருந்துவாழப், பெலம் பெற்றாய் நெஞ்சகமே யிந்தப்பேறு - பெற்றவற் குப் பிறவியுமுண்டென்னலாமோ. (அ)

உந்தியெனுஞ் சுழிமுனையைப் பற்றி யன்பா-லூதுகின்ற தாரைசங்கி னிலை மைதான்கண், டிந்திரனுமாலயனு மறி

யொணுத-விருத்லை மாணிக்க மிருந்திட
மே சென்று, நந்திவா கனமூர்த்தி கோ
யின்முன்ஞ-நடுவெழுந்த பீடவியார் த
ன்னைப் போற்றிப், பிந்திலாய் நெஞ்சக
மே யிந்தப்பேறு-பெற்றவற்குப் பிறவி
யுமுண் டென்னலாமோ. (கூ)

சிறப்புடைய வைகுந்தம் பிரமலோக
ந் - தேடறியசிவலோக மகேசலோகந்,
திறப்பறிந்து சென்றுசதா சிவனுர்லோ
கஞ்-சேர்ந்துபா லோகநெடு நாளிருந்து
துறப்பறிந்து மயிர்ப்பால மீதிலேறிச்-
சொர்க்கலோகம் புகுந்து பாத்தைச்சே
ர்ந்தாய், பிறப்புமுண்டோ நெஞ்சகமே
யிந்தப்பேறு - பெற்றவற்குப் பிறவியு
முண் டென்னலாமோ. (க0)

சதுர்கோணமாலை-முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

## பெரியபுராணத்திலுள்ள திருக்கூட்டமொன்பதும்சிவனடியாாகள்அறுபத்து மூன்றுநாயன்மார்களின்குலமரபு.



தில்லைமறை யோர்களயர்
முருகர்பசு பதியார்
சிறப்புலியார் கணநாதர்
பூசலைதண் டீசர்
கல்விநிறை சோமாசி
மாறர்நமி நந்தி
கவுணியஞா நப்பூதி
நீலநக்க ராகச்
செல்வமறை யோர்காதை
பதின்மூன்றுசிவவே
தியர்காதை யிரண்டுபுகழ்த்
துணையார்முப் போதும்

வல்லபடி சிவனையரிச்
சிப்பார்க ளாமாத்
தியர்மரபிற் சிறுத்தொண்ட
ரொருவர்முடி மன்னர். (க)

அறுவரவர் செங்கட்
சோழர்புகழ்ச் சோழ
ருண்மானி யிடங்கழியார்
நெடுமாறர் சேரர்
குலநிலமன் னவரைவர்
நரசிங்க முனையர்
கூற்றுவனூர் கழற்சிங்கர்
மெய்ப்பொருளை யடிகண்
முறைமைவணி கரிலவர்
காரைக்கா லம்மை
மூர்த்திகலிக் கம்பரமர்
நீதியியற் பகையார்

திறமைபுரி வேளாளர்
பதின்மூவர் மூர்க்கர்
செருத்துணையார் வாயிலார்
கோட்புலியார் சத்தி. (௨)

தாயனா ரிளையான்றன்
குடிமாற ராதி
சாக்கியர்கஞ் சாறர்விறன்
மிண்டர்முனை யடுவா
ரேயர்கோன் கலிக்காமர்
கோபாலர் மாபி
லிருவர் திருமூல
ராஞயர் குயவர்
சேயபுகழ்த் திருநீல
கண்டனார் பாணர்
திருமாபிற் றிருநீல
கண்டத்துப் பாணர்

மேயதிற லதிபத்தர்
பாதவர் கண்ணப்பர்
வேடர்மா பினிற்சான்ரு
ரேனதி நாதர். (௩)

நேசனர் சாலியரிற்
றிருநாளைப் போவார்
நீசர்மா பினிலெங்க
டிருக்குறிப்புத் தொண்டர்
தூசொலிக்கு மேகாலி
மாபுதில தயிலத்
தொழின்மா பிற்கலியனர்
மாபுகுறித் துரையாக்
காசில்கதை பதின்மூன்று
குலச்சிறையார் தண்டி
கணம்புல்ல ரெறிபத்தர்
காரியார் குறும்பர்

தேசுடைய பத்தர்பா
மனைப்பாடு வார்கள்
சித்தத்தைச் சிவன்பால்
வைத் தாரூரிற்பிறந்தார். (௪)

செப்பரிய பொய்யடிமை
யில்லாதார் மெய்யிற்
றிருநீறு பூசுமுனி
வர்களுலகு தன்னி
லப்பாலு மடிச்சார்ந்தா
ரிவர்கடனிற் சிலபே
ராய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர்
மலையாளர் சிலபேர்
தப்பாத தெலுங்கர்சிலர்
மற்றுளதே சத்தோர்
தவஞ்செய்து பரகதியை
யடைந்தவர்கள் சிலபே

ரிப்போது மிருந்தாளை
வழிபடுவோர் சிலபே
ரினிமேலுந் திருமேனி
கொடுவருவோர் சிலபேர். (ரு)

☞ குருவருளாலும் சிவலிங்கத்தாலு
ம் முத்தியடைந்த நாயன்மார்கள்.

திருஞான சம்பந்தர்
திருநாவுக் கரையர்
திருமூலர் நெடுமாறர்
மங்கையருக் கரசி
கரைசேருங் குலச்சிறையார்
யாழ்ப்பாணர் குறும்பர்
கணநாத ரப்பூதி
சோமாசி மாற
நரைசேரு மிவர்கள்பதி
னொருவர்குரு வருளா

லுயர்முத்தி யடைந்தவர்க
ளெறிபத்தர் கலயர்
முருகனார் கண்ணப்ப
ரானாயர் தாயர்
மூர்த்தியார் தண்டீசர்
திருநாளைப் போவார். (௩)

சேரனார் சாக்கியனார்
கூற்றுவனார் தண்டி
சிறப்புலியார் பசுபதியார்
கலிக்காமர் கலியர்
காரியா ரதிபத்தர்
நீலநக்கர் பூசல்
கணம்புல்லர் கோட்புலியார்
நமிநந்தி யடிகள்
சீருடைய கழற்சிங்கர்
வாயிலார் தூய

செருத்துணையார் புகழ்த்துணையார்
காடவரை யடிகண்
மூரிநெடு வேற்செங்கட்
சோழனு ராக
முப்பதுபேர் சிவலிங்கத்
தான்முத்தி யடைந்தோர். (எ)



அடியாரைவழிப்பட்டு
அவரான்முத்தியடைந்த
நாயன்மார்கள்.

திருநீல கண்டனு
ரியற்பகையார் மூர்க்கர்
சிறுத்தொண்டர் திருக்குறிப்புத்
தொண்டர்விறன் மிண்ட
ரருள்சேரு மிடங்கழியார்
முனையடுவார் சத்தி
மணிவேடத் தாரைவழி
பட்டானை யடைந்தோர். (அ)

யமர்நீதி மெய்ப்பொருளா
　　ரேனாதிநாவர்
கரைசெரும் புகழச்சோழர்
　　கஞ்சாறர் மாறர்
காரைக்கா லம்மைநா
　　சிங்கர்கலிக் கம்பர்
வருநேச ராகவொரு
　　பத்தொன்ப தடியார்

☞ இயலிசைவல்லாரும்

இசைத்தமிழ் நூல்வல்லாரும்
இயல்வல்லாரும்-தவ
ஞ்செய்தாரும் ஆகியவடியார்கள்

கவுணியர்நா வுக்கரசர்
　　சுந்தரரிம் மூவர்
கற்குமிய லிசைவல்லோ
　　ரிசைத்தமிழ்நூல் வல்லோர்

பவமணுகாத் திருநாளைப்
போவாரா ருயர்
பாணர்பா மனைப்பாடு
வாராகநால்வர்
புவனிபுக ழையடிக
டிருமூலர் காரி
பொய்யடிமையில்லாத
தமிழ்ப் புலவர்சேரர்.
நவமுடைய ரிவரைய்வ்
ரியல்வல்லோர் நின்ற
நாயன்மார் தவம்புரிந்து
நற்கதியை யடைந்தோர். (௯)

☞ இல்லறத்திலேநின்ற அன்பர்கள்
துறவறமாகியேயிருந்த அடியார்கள்
பிரமசாரியாயிருந்தவடியார்
அடியாரைச் சார்ந்து
முத்திபெற்றவர்கள்.

இல்லறத்தி னின்றவர்க
டிருநீல கண்ட
ரியற்பகையா ருள்ளிட்டார்
மூர்த்தியா ரப்பர்
நல்லதுற வறம்பிரம
சாரிகள்தண் டீசர்
நானிலத்தி னரனடியார்
தங்களுடன் சேர்ந்து
செல்கதிபெற் றவர்ஞான
சம்பந்த ருடனே
திருமணத்தி லொருமணமாய்ச்
சேர்ந்தவர்க ளனேகர்
பல்வளஞ்சே ராரூர
ருடன்சேர் கயிலை
பரியுகைக்க வுடன்சென்ற

பரிசனமெண் ணிறந்தோர்.

திருச்சிற்றம்பலம்.

கேடிலாதவன் றுணை.

———